## ஸூத்ரம்-60

470) "காயோடு நீடு" - பெரிய திருமொழி, 3:2:2.

471) "வீழ்கனியு மூழிலையும்" - பெரிய திருமடல், 12.

472) "ருஷிம் ஜுஷாமஹே - ரிஷியாகிற நம்மாழ்வாரை வணங்குகிறேன்" - பராங்குஶாஷ்டகம்.

473) "உண்ணுஞ்சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" - திருவாய்மொழி, 6:7:1.

## ஸூத்ரம்-61

474) "சேயரிக்கண்" - திருவிருத்தம், 2.

475) "கடலும் மழையும் விசும்பும் துழாய்" - திருவாய்மொழி, 2:1:4.

476) "சிந்தை கலங்கித் திருமால் என்றழைப்பன்" - திருவாய்மொழி, 9:8:10.

477) "எங்கே காண்கேனீன் துழாயம்மான் தன்னை" - திருவாய்மொழி, 8:5:11.

478) "உன்னைக் காண்பான் நான் அலப்பாய்" - திருவாய்மொழி, 5:8:4.

479) "ஸ மேரு கூடாதாத்மாநம் - அந்தப் பகவானுன வசிஷ்ட முனிவர் மேரு மலையின் சிகரத்திலிருந்து விழுந்தார்; அவருடைய தலை கல்லில் பஞ்சுக் குவியலில் விழுவதுபோல் விழுந்தது; அப்போது அந்த முனிவர் தலைவன் அப்படி விழுந்ததனுல் இறந்தார் இலர்; ஏ முனிவரே! அந்த வசிஷ்ட பகவான் அப்படியே நெருப்பை மூட்டி அதிலே புக்ந்தார்; நெருப்பு மிக்க ஆற்றல் வாய்ந்ததாயினும் அப்போது அந்த நெருப்பு எரிந்து கொண்டிருண்தாலும் அவரை எரிக்கவில்லை; சோகத்தினுல் பீடிக்கப்பட்டிருக்கும் அந்த வசிஷ்ட முனிவர் கடலை அடைந்து பெரிய கல்லினைக் கழுத்தில் கட்டிக்கொண்டு அந்தக் கடலில் விழுந்தார்."

480) "த்வைபாயநோ விரஹகாதா" -வ்யாசர் புத்திரரான சுகரைப் பிரிந்த பிரிவிற்கு அஞ்சினவராய்ப் புத்திரனே! என்று கூப்பிட்டார்" - ஸ்ரீ பாகவதம்,1.2:2.

## ஸூத்ரம்-62

481) "நிரஸ்தாதிஸயாஹ்லாதஸுக பாவைகலக்ஷணு - தனக்கு மேல் ஒன்றும் இல்லாததான ஆனந்தரூபமான ஸுகம் ஒன்றையே வடிவாகவுடையதும் துக்கம் இல்லாததும் மீண்டு வருதல் இல்லாததுமான பகவானை அடையும் பேறுனது, ஸம்ஸார துக்கத்துக்கு மருந்தாக இருக்கும்; ஆகையால் பண்டிதர்களான மனிதர்கள் அந்த எம்பெருமானை அடைவதற்கு முயற்சி செய்யக் கடவர்; மைத்ரேய முனிவரே! ஞானமும் கர்மமும் அவனை அடைவதற்கு உபாயமாகச் சொல்லப்பட்டன" - ஸ்ரீவிஷ்ணுபுராணம், 6.5:59,60.

482) "தனக்கேயாக வெனைக் கொள்ளுமீதே" - திருவாய்மொழி, 2:9:4.

483) "வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம்" - திருவாய்மொழி, 3:3:1.

484) "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்" - திருவாய்மொழி, 5:10:11.

485) "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" - திருவாய்மொழி, 6:10:10.

486) "மற்றெரு தெய்வம் தொழாள்" - திருவாய்மொழி, 4:6:10.

ஸூத்ரம்-63

487) "காவ்யம் ராமாயணம் - இராமாயண கஆவியம் முழுதும் இத்தகையஶ்லோகங்களால் நான் செய்கிறேன்" - ஸ்ரீராமா, பால, 2:42.

488) "நாராயண கதாமிமாம் - நாராயணனுடைய இந்தக் கதையைச் சொல்லப் போகிறேன்" - பாரதம், ஆதிபர்வம்.

489) "அசத்கீர்த்தந காந்தார - பொருளல்லாதவற்றைப் பேசுதலாகிற காட்டிலே சுற்றியதால் புழுதி அடைந்த வாக்கினைக் கண்ணபிரானுடைய சரிதையைச் சொல்லுதலாகிற கங்கை நீராலே தூய்மை ஆக்குகிறேன்" - ஹரிவம்சம்.

490) "திருமாலவன் கவியாது கற்றேன்" - திருவிருத்தம் 48.

491) "மாற்றங்களாய்ந்து கொண்டு" - திருவாய்மொழி, 6:8:11.

492) "உரியசொல்லாலிசை மாலைகளேத்தி" - திருவாய்மொழி, 4:5:6.

493) "வாய்த்தவாயிரம்" - திருவாய்மொழி, 2:2:11.

494) "வேதேஷு பௌருஷம் - வேதங்களுக்குள் புருஷ ஸூக்தமும், தர்ம சாஸ்த்ரங்களுக்குள் மநு தர்மமும், பாரதத்தில் பகவத் கீதையும், புராணங்களில் ஸ்ரீவிஷ்ணு புராணமும் உயர்ந்தவைகளாம்"

495) "தீதிலந்தாதி" - திருவாய்மொழி, 8:2:11.

ஸூத்ரம்-64

496) "ஸம்பத்தேரிதி ஜைமிநி: -ப்ராணஹுதி ஹோமங்களை அக்நிஹோத்ர ஹோமங்களாகச் செய்வதற்காக உபாசகனுடைய மார்பு முதலான உறுப்புக்களை நெருப்புக்களாகக் கூறியுள்ளது என்று ஜைமிநி சொன்னர்" -ப்ரஹ்ம ஸூத்ரம், 1.2:32.

497) "அந்யார்த்தம் து ஜைமிநி: - வேறு பயனுக்காகவே இங்கு ஜீவனைச் சொல்லுகிறது என்று ஜைமிநி சொல்லுகிறார்" -ப்ரஹ்ம ஸூத்ரம், 1.4:18.

498) "பரம் ஜைமிநிர் முக்யத்வாத் - பரப்ரஹ்மத்தை உபாசிக்கின்றவர்களையே ஆதிவாஹிகர்கள் அழைத்துக்கொண்டு போகிறார்கள் என்று ஜைமிநி எண்ணுகிறார். 'ப்ரஹ்ம கமயதி' என்ற இடத்திலுள்ளப்ரஹ்ம ஶப்தம்ப்ரஹ்மத்திடமே முக்யமாக இருப்பதால்" -ப்ரஹ்ம ஸூத்ரம், 4.3:11.

499) "ப்ராஹ்மணே ஜைமிநி: -ப்ரஹ்ம ஸம்பந்தியான அபஹத பாப்மத்வம் முதலான குணங்களோடு முக்தன் தோன்றுகிறன் என்று ஜைமிநி சொல்லுகிறார்" -ப்ரஹ்ம ஸூத்ரம், 4.4:5.

500) "நஹி நிந்த்யா நிந்த்யம் நிந்திதும்ப்ரவர்த்ததே, நிந்திதாத் இதரத்ப்ரஸம்ஸிதும் - நிந்தையானது, நிந்திக்கும் பொருளை நிந்திப்பதற்கு வரவில்லை; நிந்திக்கும் பொருளைக் காட்டிலும் வேறானதொரு பொருளைத் துதிப்பதற்காக வந்தது"

501) "செஞ்சொற்கவிகாள்" - திருவாய்மொழி, 10:7:1.
502) "செந்தமிழ் பாடுவார்" - பெரிய திருமொழி, 2:8:2.
503) "இன்கவிபாடும் பரமகவிகள்" - திருவாய்மொழி, 7:9:6.
504) "பதியே பவத்தொழும் தொண்டர்" - பெரிய திருமொழி, 7:1:7.
505) "அரங்காவோ வென்றழைக்கும் தொண்டர்" - பெருமாள் திருமொழி, 2:2.
506) "பேசிற்றே பேசலல்லால்" - திருமாலை, 22.
507) "என்னில் மிகுபுகழார் யாவர்" - பெரிய திருவந்தாதி, 4.
508) "உரைகொளின் மொழி" - திருவாய்மொழி, 6:5:3.
509) "வலங்கொண்ட வாயிரம்" - திருவாய்மொழி, 3:8:11.
510) "மந்வர்த்த விபரீதா - எந்தஸ்ம்ருதியானது மநுவினுல் சொல்லப்பட்ட பொருளுக்கு மாறுபட்டிருக்கிறதோ அது, புகழப்படுவதில்லை"

ஸூத்ரம்-66

511) "விதயச்ச வைதிகாஸ்த்வதீய கம்பீரமநோநுஸாரிண: - வேதத்தில் சொல்லப்படுகின்ற விதிகள், தேவரீரைச் சரணமாகப் பற்றியிருக்கின்ற பெரியோர்களுடைய கம்பீரமான மனத்தினை அநுசரித்தவைகளாக ஆகின்றன" - ஸ்தோத்ர ரத்னம், 20.

ஸூத்ரம்-67

512) "உளன் சுடர்மிகு சுருதியுள்" - திருவாய்மொழி, 1:1:7.
513) "மார்க்கண்டேயனும் கரியே" - திருவாய்மொழி, 5:2:7.
514) "பார்த்தன் தெளிந்தொழிந்த" - திருவாய்மொழி, 2:8:6.
515) "ஸ ஹோவாசவ்யாஸ: பாராசர்ய - பராசர முனிவருடைய புதல்வரான அந்தவ்யாசர் சொன்னுர்" - ஆரணம்.
516) "யத் வை கிஞ்ச - எது ஒன்றை மநுவானவர் சொன்னுரோ அது மருந்து" - யஜுர் வேதம்.
517) "ப்ரஹ்மவாதிநோ வதந்தி -ப்ரஹ்மத்தை அறிந்தவர்கள் சொல்லுகிருர்கள்" - யஜுர் வேதம்.

ஸூத்ரம்-68

518) "வேதரூபமிதம்க்ருதம் - வேதரூபமாகச் செய்யப்பட்டது இத்திருவாய்மொழி"
519) "த்ராவிடீம்ப்ரஹ்ம ஸம்ஹிதாம் - தமிழ் மொழியான,ப்ரஹ்ம விஷயமான திருவாய்மொழி என்னுமுபநிஷத்தை" - ஸ்ரீரங்கராஜஸ்தவம், பூர்வ, 6.
520) "த்ராவிடவேத ஸூக்தை: - தமிழ் ரூபமான வேதஸூக்தங்களாலே" - ஸ்ரீரங்கராஜஸ்தவம், பூர்வ, 16.

521) "வேதாநத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந் - மஹாபாரதமென்கிற ஐந்தாவது வேதங்களை அத்யயனம் செய்வித்தார்" - ஸ்ரீவிஷ்ணு புராணம்.

522) "பகவத் கீதாஸூபநிஷத்ஸு - பகவத்கீதையாகிற உபநிடதங்களில்"

ஸூத்ரம்-69

523) "கஜகர்ணச் சோரகதிர் - கஜகர்ணம், சோரகதி, மகரத்வஜ:, லக்ஷ்மீ கீர்த்தி:, பாணி, பாதம், கௌரீ, பஞ்சானனம், சதுராம் நாயம், கருடத்வஜம் என்னுமிவைகள் சங்கீதம் அறிந்தவர்களால் தாளங்களாகச் சொல்லப்பட்டன."

524) "இப்பத்தும்" - திருவாய்மொழி, 9:4:11.

525) "இவை பத்தும்" - திருவாய்மொழி, 5:5:11.

526) "நூறே சொன்ன" - திருவாய்மொழி, 9:4:11.

527) "பத்து நூற்றுள்" - திருவாய்மொழி, 6:7:11.

528) "சதுர்விம்சத்ஸஹஸ்ராணிச்லோகாநாம் - வால்மீகி முனிவர் இருபத்து நாலாயிரம்ச்லோகங்களைக் கூறினர்" - ஸ்ரீராமா, பால, 4:2.

529) "செய்கோலத்தாயிரம்" - திருவாய்மொழி, 4:1:11.

ஸூத்ரம்-70

530) "வேதவேத்யே - வேதங்களால் அறியப்படும் பரமபுருஷனைவன் சக்கரவர்த்தித் திருமகனுக அவதரித்தவாறே அந்த வேதங்களும் பிரசேதஸ்ஸின் புதல்வரான வால்மீகி பகவானிடமிருந்து ஸ்ரீராமாயணமாகப் பிறந்தது." - ஸ்ரீராமா, பால.

531) "க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே - இந்த ராஜஸ தாமச குணங்களின் மயமான இப்பிரக்ருதி மண்டலத்தின்மேல் (பரமபதத்தில்) எழுந்தருளியிருப்பவரான" - தைத்திரீய உபநிஷத்.

532) "ஆதித்ய வர்ணம் தமஸ:ப்ரஸ்தாத் - ஸூர்யனுடைய வர்ணம் போன்ற வர்ணத்தையுடைய இந்தப் பரமபுருஷனை நான் அறிவேன்; அவன் தமஸ்ஸாகிற பிரகிருதி மண்டலத்திற்கு அப்பால் (பரமபதத்தில்) இருக்கின்றான்" - புருஷ ஸூக்தம்.

533) "தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய: - விஷ்ணுவினுடைய அந்த உயர்ந்த இடத்தை (பரமபதத்தை) நித்யஸூரிகள் எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்" - யஜுர்வேதம்.

534) "யோ வேத நிஹிதம் - ஹிருதய குகையில் வைக்கப்பட்டிருக்கிற இந்தப்ப்ரஹ்மத்தை எவன் வழிபடுகிறானோ அவன்ப்ரக்ருதி ஸம்பந்தம் இல்லாதது என்று சொல்லப்படும் பரமபதத்தில் அந்தப்ப்ரஹ்மத்துடன்கூட எல்லாக் கல்யாண குணங்களையும் அனுபவிக்கிறான்" - தைத்திரீய உபநிஷத்.

535) "முதுவேதம்" - திருவாய்மொழி, 1:6:2.

536) "ஷாட்குண்யாத் வாஸுதேவ: - தேவரீர் பரவாசுதேவ விக்ரஹத்தோடு கூடினவராய் ஆறு குணங்களால் முக்தர்களுக்கு இனியராகா நின்றீர்" - ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத்தர, 39.

537) "பலாட்யாத் போதாத் - வலிமையோடு கூடினஜ்ஞானத்தாலே ஸங்கர்ஷணராகிற நீர் அழித்தலைச் செய்கிறீர், ஶாஸ்த்ரங்களையும் நன்குக விரிவுபடுத்துகிறீர்;ப்ரத்யும்நராய் ஐஶ்வர்யத்தாலும் வீர்யத்தாலும் படைத்தலைச் செய்கின்றீர், தர்மத்தையும் பரப்புகின்றீர்; அப்படியே அநிருத்தராய் சக்தியையும் ஒளியையும் தரித்துக்கொண்டு காப்பாற்றுகின்றீர், தத்துவத்தையும் பரப்புகின்றீர்." - ஸ்ரீரங்கராஜஸ்தவம், உத்தர, 39.

538) "ஸங்கர்ஷணுதி ஸத்பாவம் - உலகத்துக்கு நலம் செய்யவேண்டுமென்னுமிச்சையால் ஸங்கர்ஷணன் முதலானவ்யூக நிலைகளை அடைகிறேன்; முறையாக அழித்தல் படைத்தல் அளித்தல் என்னுமிவைகளால் உயிர்களுக்கு அநுக்ரஹம் ஏற்படுகின்றது; பின்னும் ஶாஸ்த்ரம், ஶாஸ்த்ரங்களின் பொருளான தர்மம், அவற்றுலாய தத்வஜ்ஞானம் முதலான பயன்களும் இருக்கின்றன; நான்குவ்யூகங்களிலும் துரீயம் ஸுஷுப்தி இவை முதலான நிலைகளையும் அறிந்து கோடல் வேண்டும்." - விஷ்வக்ஸேன ஸம்ஹிதை.

539) "தத்ரஜ்ஞாந - அந்தவ்யூகத்தில்ஜ்ஞாநம், பலம் என்னும் குணங்களின் சேர்க்கையால் விஷ்ணுவினுவினுடைய ஸங்கர்ஷண உருவம் உண்டாகின்றது; ஐஶ்வர்யம், வீர்யம் என்னுமிவைகளின் சேர்க்கையால்ப்ரத்யும்நனுடைய திருமேனி உண்டாகின்றது; விஷ்ணுவுக்கு சக்தி, ஒளி என்னுமிவைகளின் சேர்க்கையால் அநிருத்தருடைய திருமேனி உண்டாகின்றது; இந்த சக்திமயங்களானவ்யூகங்கள் குணங்களின்ப்ரகாசங்களுக்கு இலக்கணங்கள்."- விஷ்வக்ஸேன ஸம்ஹிதை.

540) "பஞ்ச ராத்ரஸ்ய - எல்லாப் பாஞ்சராத்ரங்களையும் சொன்னவன் நாராயணனே" - பாரதம்.

541) "ஓதினுய் நீதி" - இரண்டாந் திருவந்தாதி, 48.

542) "ஆபோ நாரா இதி - தண்ணீரானது நரன் என்று சொல்லப்படுகிற பரமாத்மாவினிடமிருந்து தோன்றியது; ஆதலால், தண்ணீர் நாரம் என்று சொல்லப்படுகிறது. முன்பு யாது காரணத்தால் அந்த நீரானது இந்தப் பரமாத்மாவிற்குச் சரீரமாயிருந்ததோ அதனுல் நாராயணன் என்று எண்ணப்படுகிருன்." - மநுஸ்ம்ருதி, 1:19.

543) "ப்ரசாஸிதாரம் - பரமபுருஷனை, எல்லாவற்றையும் நியமிப்பவனுகவும் ஸூக்ஷமமானதைக் காட்டிலும் ஸூக்ஷமமானவனுயும் ஓட வைத்த பொன்னிறமுடையவனுகவும் கனவிலுள்ள புத்தி போன்ற யோகத்தால் அடையத் தக்கவனுகவும் அறிதல் வேண்டும்." - மநுஸ்ம்ருதி, 12:122.

544) "ஏஷ ஸர்வாணி பூதாநி - இவன், எல்லா உயிர்களையும், மண் முதலிய ஐந்து பூதங்களாலான சரீரங்களால் பரந்து பிறத்தல், வளர்த்தல், இறத்தல் என்னுமிவைகளால் எப்பொழுதும் சக்கரம் போன்று சுழலும்படி செய்கிருன்" - மநுஸ்ம்ருதி, 12:124.

545) "ஸ ஆத்மா, அங்காந்யந்யா தேவதா: - 'ஸ ஆத்மா' என்ற சொற்களால் சொல்லப்பட்டவனே பரமாத்மா, மற்றைத் தேவர்கள் அவனுக்குச் சரீரங்கள்" - தைத்திரீய உபநிஷத்.

546) "கேட்ட மனு" - நான்முகன் திருவந்தாதி, 76.

547) "படுகதையும்" - நான்முகன் திருவந்தாதி, 76.

548) "ஆகமூர்த்தியாயவண்ண மென்கொல்" - திருச்சந்த விருத்தம், 17.

549) "தமருகந்த தெவ்வுருவம்" - முதல் திருவந்தாதி, 44.

550) "சடகோபன் பண்ணிய தமிழ்" - திருவாய்மொழி, 2:7:13.

551) "எய்தற்கரிய மறைகளை" - இராமாநுச நூற்றந்தாதி, 18.

ஸூத்ரம்-71

552) "தோதவத்தித்தூய்மறையோர் துறை" - பெரியாழ்வார் திருமொழி, 4:8:1.

553) "பொருநல்சங்கணி துறை" - திருவாய்மொழி, 10:3:11.

554) "துகில்வண்ணத்தூநீர்" - திருவாய்மொழி, 7:2:11.

555) "தெண்ணீர்ப்பொன்னி" - பெருமாள் திருமொழி, 1:1.

556) "பிபேத்யல்பச்ருதாத் வேதோ - வேதமானது சிறிது கற்றவனிடம், இவன் என்னை ஏமாற்றிவிடுவான் என்று அஞ்சுகிறது" - பார்ஹஸ்பத்யஸ்மிருதி.

557) "நன்ஞானத்துறை" - திருவிருத்தம், 93.

558) "தெளிவுற்றவாயிரம்" - திருவாய்மொழி, 7:5:11.

559) "அறிவித்தேன் ஆழ்பொருளைச் சிந்தாமற் கொண்மின்" – நான்முகன்திருவந்தாதி,1.

ஸூத்ரம்-72

560) "ச்ராவண்யாம்ப்ரௌஷ்ட்டபத்யாம் - ப்ராஹ்மணன் ஆவணி மாதத்திலாவது புரட்டாசி மாதத்திலாவது சாஸ்த்ரத்தில் சொல்லியபடி உபாகர்மங்களைச் செய்து நியமத்துடன் கூடினவனாய் நாலரை மாதங்களில் வேதங்களை அத்யயனம் செய்யக்கடவன்; இதற்குப் பிறகு நியமத்துடண்ண் கூடினவனாய் சுக்லபக்ஷத்தில் வேதங்களை ஓதக்கடவன்; வேதாங்கங்களையும் உபநிடதங்களையும்க்ருஷ்ணபக்ஷத்தில் நன்றாக அத்யயனம் செய்யக்கடவன்." - மநுஸ்ம்ருதி, 4:95.

561) "நூற்கடல்" - மூன்றாம் திருவந்தாதி, 32.

562) "இவள் வாயனகள் திருந்த" - திருவாய்மொழி, 6:5:7.

563) "அத்யேதவ்யம் - வேதரூபமாகச் செய்யப்பட்ட இத்திருவாய்மொழிப்ராஹ்மணோத்தமர்களாலும் பெண்களாலும் நான்காம் வர்ணத்தவர்களாலும் அத்யயனம் செய்யத்தக்கது; இதனை அத்யயனம் செய்யுமவர்களுக்கு மோக்ஷம் கையில் இருக்கிறது" - பாஞ்சராத்ரம்.

ஸூத்ரம்-74

564) "பெரும்புறக்கடலை" - பெரிய திருமொழி, 7:10:1.

565) "யமாத்மா ந வேத - எந்தப் பரம்பொருளை ஆத்மா அறியவில்லையோ" - ப்ருஹதாரண்யம், 5:7:22.

566) "கட்கிலீ" - திருவாய்மொழி, 7:2:3.

567) "மாநுஷே லோகே - மனிதலோகத்தில் நித்யரான விஷ்ணுவானவர் பிறந்தார்" - ஸ்ரீராமா, அயோத்யா, 1:7.

568) "யஸ்யாம் ஜாதோ - உலகநாதனும் நித்யனுமான விஷ்ணுவானவர் எவ்விடத்தில் அவதரித்தாரோ"

569) "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய - திருவனந்தாழ்வானுகிற படுக்கையைத் தனக்கு முன்னே அவதரிக்கும்படி போகவிட்டு மதுரை என்ற நகரத்திற்கு எழுந்தருளினுரன்றே" - ஹரிவம்சம், 113:62.

570) "விஷ்ணுர் மாநுஷரூபேண - விஷ்ணுவானவர் மனித உருவத்தோடு பூலோகத்தில் சஞ்சரித்தார்"

571) "ஞாலத்தூடே நடந்து"- திருவாய்மொழி, 6:9:3.

572) "அதிலே தேங்கின மடுக்கள் போலே" - ஸ்ரீவசநபூஷணம், ஸூ-39.

573) "மதிமந்தாந - எந்தவ்யாஸபகவானுல் வேதமாகிற கடலில் நின்றும் ஞானமாகிற மத்தை யிட்டுக் கடைந்து"

ஸூத்ரம்-75

574) "கனிவார் வீட்டின்பம்" - திருவாய்மொழி, 2:3:5.

575) "அந்தமிழின்பப்பா" - பெருமாள் திருமொழி, 1:4.

576) "அடியார்க்கின்பமாரி" - திருவாய்மொழி, 4:5:10.

577) "விஷ்ணோரர்ச்சாவதாரேஷு - எவன் விஷ்ணுவின் அர்ச்சாவதாரங்களில் உலோகம் என்ற புத்தியைச் செய்கிருனே, எவன் குருவினிடத்தில் மணிதன் என்ற எண்ணத்தைச் செய்கிருனே, அவ்விருவர்களும் நரகத்தில் விழுமவர்களாவர்" - ப்ரம்மாண்ட புராணம்.

578) "யோ விஷ்ணௌப்ரதிமாகாரே - எவன் விக்ரஹமாய் எழுந்தருளியிருக்கும் பகவானிடத்தில் உலோகம் என்ற புத்தியைச் செய்கிருனே, எவன் குருவினிடத்தில் மனித புத்தியைச் செய்கிருனே, அவ்விருவரும் நரகத்தில் விழுமவர்கள்"

579) "அர்ச்சாவதாரோபாதனம் வைஷ்ணவோத்பத்தி சிந்தநம், மாத்ருயோநி பரீக்ஷயாஸ் துல்யமாஹுர் மநீஷிண: - ஞானிகள், அர்ச்சாவதாரத்தில் முதற் காரணத்தை நினைப்பதும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பிறப்பினை நினைப்பதும் தாயின் யோநி பரீகைக்கு ஒப்பாம் என்று சொல்லுகிருர்கள்"

580) "ஹரிகீர்த்திம் விநைவாந்யத் - அரசனே!ப்ராஹ்மணன் விஷ்ணுவினுடைய புகழைத் தவிர வேருன தமிழ்ச் செய்யுட்கள் பாடலாகாது; ஆனதால், (நீ தமிழில்

பாடினுர் என்று நாட்டினே விட்டுத் துரத்தின காரணத்தால்) உன்னுல் பாபகாரியம் செய்யப்பட்டது" - மாத்ஸபுராணம்.

581) "கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் - யோகிகள் இந்தப் பூமியில் எல்லாப் பிறவிகளிலும் பிறக்கிருர்கள்; ஜீவாத்மாவிற்குத் தலைவனுன பரமாத்மாவை நேரே கண்டறிந்த இந்த யோகிகளுடைய குலம் தொழில் முதலியன சிறிதும் நினைக்கத்தக்கனவல்ல." - பவிஷ்யோத்தரம்.

582) "சூத்ரம் வா பகவத் பக்தம் - பகவத் பக்தனுன நான்காம் வருணத்தானையாவது, வேடுவனையாவது, நாய் இறைச்சியைத் தின்னும் நீசனையாவது அந்தந்த சாதியைக் கொண்டு எவன் பார்க்கிருனே அவன் நரகத்தினை அடைவான்"

583) "அவஜாநந்தி மாம் மூடா - மனித ஶரீரத்தை எடுத்திருக்கிற அறப்பெரியனுன என்னை அறிவில்லாத மாக்கள் (என் தன்மையை அறியாமல்) அவமதிக்கிருர்கள்" - ஸ்ரீகீதை, 9:11.

584) "பச்யந்தி கேசிதநிசம் - எல்லோரையும் விட மேம்பட்டவராயிருக்கும் தேவரீரது தன்மையை, தேவரீரைத் தவிர வேறு பொருட்களில் எண்ணத்தைச் செலுத்தாத ஒரு சிலர் எப்போதும் பார்க்கிருர்கள்" -ஸ்தோத்ரரத்நம், 16.

ஸூத்ரம்-76

585) "வெள்ளியார் பிண்டியார்" - பெரிய திருமொழி, 9:7:9.

586) "பொய்ந்நூலை" - பெரிய திருமொழி, 2:5:2.

ஸூத்ரம்-77

587) "ஒருத்தி மகனுய்ப் பிறந்து" - திருப்பாவை, 25.

588) "கண்ணன் நீண் மலர்ப்பாதம்" - திருவிருத்தம், 37

589) "க்ருஷ்ணத்ருஷ்ணு தத்வமிவோதிதம் - கிருஷ்ணன்னிடத்தில் வைத்த ஆசையே ஒரு வடிவுகொண்டாற் போன்றவரான நம்மாழ்வார்" - ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசத, 6.

ஸூத்ரம்-78

590) "திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற" - பெரியாழ்வார் திருமொழி,1:2:17.

591) "திருவிலேனென்றும் பெற்றிலேன்" - பெருமாள் திருமொழி, 7:5.

592) "த்வீபே பதரிகாமிச்ரே - இலந்தைக் காடு கலந்த காட்டில் சத்யவதி யென்பவள் பராசரரிடமிருந்து, பகைவனைத் தபிக்கச் செய்யும் விஷ்ணுவின் அம்சமானவ்யாச முனிவரைப் பிள்ளையாக அடைந்தாள்" - பாரதம்.

593) "புந: கந்யா பவிஷ்யதி - மீளவும் கன்னியாகக் கடவாய்"

594) "எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்ருளே" - பெருமாள் திருமொழி,7:5.

595) "தத்துக் கொண்டாள்கொலோ" - பெரியாழ்வார் திருமொழி, 2:1:7.

596) "இம்மாயம் வல்ல பிள்ளை நம்பி யுன்னை" - பெரியாழ்வார் திருமொழி,3:1:3.
597) "நெடுங்காலமும் கண்ணன் நீண் மலர்ப்பாதம் பரவிப் பெற்ற" - திருவிருத்தம், 37.
598) "நங்கைமீர் நீருமோர் பெண்பெற்று நல்கினீர்" - திருவாய்மொழி, 4:2:9.

ஸூத்ரம்-79

599) "வெறிகொள் துழாய்மலர் நாறும்" - திருவாய்மொழி, 4:4:3.
600) "இவளந்தண்டுழாய் கமழ்தல்" - திருவாய்மொழி, 8:9:10.

ஸூத்ரம்-80

601) "அறிவொன்றுமில்லாத வாய்க்குலம்" - திருப்பாவை, 28.
602) "பவள நன்படர்க்கீழ்ச் சங்குறை பொருநல்" - திருவாய்மொழி, 9:2:5.
603) *"பொருநல் சங்கணி துறை" - திருவாய்மொழி, 10:3:11.
604) "நல்லார் நவில் குருகூர்" - திருவிருத்தம், 100.
605) "சயப்புழார் பலர்வாழும் தடங்குருகூர்" - திருவாய்மொழி, 3:1:11.
606) "நல்லார் பலர்வாழ் குருகூர்" - திருவாய்மொழி, 10:8:11.

ஸூத்ரம்-81

607) "பவாந் நாரயணோ தேவ: - தேவரீரி நாராயணன் என்ற தெய்வம்" - ஸ்ரீராமா, யுத், 120:13.
608) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம் - என்னை மனிதனாகவும் இராமன் என்னும் பெயரினனாகவும் தசரத சக்ரவர்த்திக்குப் புத்ரனாகவும் எண்ணுகிறேன்" - ஸ்ரீராமா, யுத், 120:11.
609) "பாலத்வஞ்சாதி வீர்யஞ்ச - இளமையும், மிகுந்த வீர்யமும் எங்களிடத்தில் தோன்றிய நன்மையற்ர பிறவியும் நினைக்கும்போது ஐயம் உண்டாகிறது; தேவரீர் தேவனா? அசுரனா? இயக்கனா? கந்தர்வனா?" - ஸ்ரீவிஷ்ணுபுராணம், 5:13:7.
610) "க்ஷணம் பூத்வாத்வஸௌ - இந்தக் கிருஷ்ணன் சிறிது போழ்துப்ரணய கோபமுள்ளவனாய்க் கணநேரம் வாய்திறவாமலிருந்து" - ஸ்ரீவிஷ்ணுபுராணம், 5:13:9.
611) "நாஹம் தேவோ - நான் தேவனல்லன், கந்தர்வனுமல்லன், இயக்கனுமல்லன், அசுரனுமல்லன். நான் உங்களுக்கு உறவினனாகத் தோன்றினேன்; ஆதலால், வேறுவிதமாக இது நினைக்கத் தக்கதன்று" - ஸ்ரீவிஷ்ணுபுராணம், 5:13:12.
612) "ஸ உச்ரேயாந் பவதி ஜாயமாந: - அந்தப் பரமபுருஷன் பிறந்ததனாலே ஒளியுடையவனானன்" - யஜுர்வேதம், 3:6:3.
613) "பலபிறப்பாயொளிவருமுழுநலம்" - திருவாய்மொழி, 1:3:2.

614) "மாஸ்ம பூதபிமே ஜந்ம சதுர்முகாத்மநா - எனக்குப் பிரமனுகவும் பிறவி வேண்டா" -ஸ்தோத்ரரத்நம், 55.

615) "பண்டை நாள்" - திருவாய்மொழி, 9:2:1.

616) "ஆழியங்கைப் பேராயற்காளாம் பிறப்பு" - பெரிய திருவந்தாதி, 79.

ஸூத்ரம்-82

617) "ஜநகாநாம் குலே - என் புத்திரியான பிராட்டி, சக்ரவர்த்தித் திருமகனுன ஸ்ரீராமபிரானைக் கணவனுக அடைந்து ஜனகர்களுடைய குலத்துக்குக் கீர்த்தியை உண்டாக்கப் போகிருள்" - ஸ்ரீராமா, பால, 67:21.

618) "ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் - ராஜ்யமும் நானும் ஸ்ரீராமபிரானுடைய செல்வம்; இந்த விஷயத்தில் தர்மத்தைச் சொல்லக்கடவீர்; தசரதனுக்கு மகனுகப் பிறந்தவன் எப்படி ராஜ்யத்தை அபஹரிப்பவனுக எப்படி ஆகக்கூடும்?" - ஸ்ரீராமா, அயோத்யா, 82:12.

619) "ஜடிலம் சீரவஸநம் - சடையை உடையவனும் மரவுரியை உடுத்துக் கொண்டிருப்பவனும் கைகூப்பி வணங்கினவனுய்ப் பூமியில் விழுந்தவனுமான ஸ்ரீபரதனைப் பார்த்தார்." - ஸ்ரீராமா, அயோத்யா, 100:1.

620) "பங்கதிக்தஸ்து ஜடிலோ பரதஸ் - பரதனே சடைமுடியுடையவனுய்ச் சரீரம் எங்கும் அழுக்கடைந்தவனுய்த் தேவரீருடைய வருகையை எதிபார்த்துக்கொண்டிருக்கிறன்" - ஸ்ரீராமா, யுத், 127:5.

621) "மக்களறுவரைக் கல்லிடை மோதவிழந்தவள் தன் வயிற்றில்" - பெரியாழ்வார் திருமொழி, 5:3:1.

622) "தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ" - பெரிய திருமொழி, 7:5:1.

623) "மலிபுகழ் வண்குருகூர்" - திருவாய்மொழி, 4:2:11.

624) "குடிக்கிடந்தாக்கம் செய்து" - திருவாய்மொழி, 9:2:2.

625) "காணவாராய்" - திருவாய்மொழி, 8:5:2.

626) "கண்ணநீர் கைகளாலிறைத்து" - திருவாய்மொழி, 7:2:1.

627) "இட்டகாலிட்ட கையர்" - திருவாய்மொழி, 7:2:4.

628) "அறுவர் தம் பிறவியஞ்சிறையே" - திருவாய்மொழி, 1:3:11.

ஸூத்ரம்-83

629) "கதிரவன் குணதிசை" - திருப்பள்ளியெழுச்சி, 1.

630) "தமோ பாஹ்யம் - நெருப்பு சூரியன் என்னுமிவர்கள் முன்னிலையில் புறவிருள் நாசமடையும்; விஷ்ணு பக்தனுகிற சூரியன் முன்னிலையில் புறவிருளோடு உள்ளிருளும் நாசமடையும்"

631) "சரஜாலம்சுமாந் சூர - ஏ அநும! அம்புக்கூட்டங்களகிற கிரணங்களையுடைய வீரனுன இராமதிவாகரன், பகைவர்களகிற இராக்கதக்கடலை வற்றும்படி செய்யப்போகிருர்" - ஸ்ரீராமா,சுந்தர,37:16.

632) "பிறவியென்னுங் கடல்" - பெரியாழ்வார் திருமொழி, 5:4:2.

633) "ததோகில ஜகத்பத்ம - தேவகிப் பிராட்டி கருத்தரித்த பின்பு அனைத்துலகங்களகிற தாமரையை மலர்த்துவதற்காகத் தேவகியாகிற கிழக்குத் திக்கில் ஒளியுடைய கிருஷ்ணனுகிற அச்யுதபாநு தோன்றினுன்" - ஸ்ரீவிஷ்ணு புராணம், 5:3:2.

634) "போதில் கமலவன்னெஞ்சம்" - பெரியாழ்வார் திருமொழி, 5:2:8.

635) "யத்கோ ஸஹஸ்ரம் - எவருடைய திருவாய்மொழியின் திருப்பாசுரங்களாகிற ஆயிரம் கிரணங்கள் மனிதர்களுடைய அறிவின்மையாகிற இருளைப் போக்கடிக்கின்றனவோ, திருவாழி திருச்சங்குகளைத் தரித்த ஸ்ரீமந்நாராயணன் எவரிடத்தில் வசிக்கின்றுரோ, காதுகளை அடைந்திருக்கின்ற எந்தத் தேசத்தை பிராமணர்கள் வணங்குகின்றுர்களோ, அந்த ஆழ்வாராகிற வகுளபூஷண பாஸ்கரருக்கு வணக்கம்." - பராங்குஶாஷ்டகம்.

636) "கண்கள் சிவந்து" - திருவாய்மொழி, 8:8:1.

637) "ஊரும் நாடும்" - திருவாய்மொழி, 6:7:2.

ஸூத்ரம்-84

638) "யயாதி சாபாத் வம்சோயம் - இந்த வம்சம் யயாதியினுடைய சாபத்தால் ராஜ்யத்தை யாள்வதற்குத் தகுதியற்றது" - ஸ்ரீவிஷ்ணு புராணம், 5:21:12.

639) "அயம் ஸ கத்த்யதே - புராணங்களின் பொருளை அறிந்த பெரியோர்களால், அத்தகைய இந்தக் கிருஷ்ணன் மூழ்கிக் கிடந்த யதுவின் வம்சத்தை மேல் நிலைக்குக் கொண்டுவரப்போகிருர் என்று சொல்லப்படுகிறது." - ஸ்ரீவிஷ்ணு புராணம், 5:20:49.

640) "அங்கோராய்க்குலம் புக்கதும்" - திருவாய்மொழி, 6:4:5.

641) "உத்த்ருதாஸி வராஹேண - ஏ பூமியே! வராஹ அவதாரம் எடுத்த பகவானுடைய முயற்சியாலே மேலே எடுக்கப்பட்டாய்" - தைத்திரீய உபநிஷத்.

642) "நமஸ்தஸ்மை வராஹாய - விளையாட்டாக பூமியை மேலே எடுத்த வராஹ நயினுருக்கு வணக்கம் " - ஸ்ரீவராஹ புராணம்.

643) "கேழலாய்க் கீழ்ப்புக்கு இடந்திடும்" - திருவாய்மொழி, 2:8:7.

644) "அபிமானதுங்கன்" - திருப்பல்லாண்டு, 11.

ஸூத்ரம்-85

645) "மத்பக்தஜநவாத்ஸல்யம் - என்னுடைய வடியார் பக்கல் அன்பும், என்னை யாராதிப்பதில் உகப்பும், தனெ வாராதிக்கையும், என்னிடத்தில் ஆடம்பரமின்றி யிருத்தலும், என் கதையைக் கேட்குமிடத்தில் பக்தியும், பக்தியின் காரியமான குரல் தழுதழுத்தலும், கண்ணநீர் சொரிதலும், மயிர்க்கூச்செரிதலும், எப்பொழுதும் மென்னை நினைப்பதும், என்னிடமிருந்து வேறு பயன்களைக்

கொள்ளாதிருத்தலுமாகிய எட்டுவிதமான பக்தியானது எந்தக் கீழ்க்குலத்தானிடமு மிருக்கிறதோ" - பகவச்சாஸ்த்ரம்.

646) "ஸ விப்ரேந்த்ரோ முநி: - எட்டு விதமான பக்தியையுடைய அவன் கீழ்க்குலத்தானுயினும் அவனேப்ராஹ்மணுேத்தமன்; அவனே முனிவன்; அவனே செல்வத்தையுடையவன்; அவனே துறவி; அவனே பண்டிதன்; அவனுக்கு ஞானத்தைக் கொக்டுக்கக் கடவன்; அவனிடமிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள்ளக் கடவன்." - பகவச்சாஸ்த்ரம்.

647) "பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள்" - திருமாலே, 42.

648) "ஸச பூஜ்யோ யதாஹ்யஹம் - நான் பூஜிக்கப்படுவது போன்று அவனும் பூஜிக்கத் தக்கவன்"

649) "நின்னெடுமொக்க வழிபட" - திருமாலே, 42.

650) "மம நாதம் மம குலதைவதம் - என்னுடைய நாதனும், என்னுடைய குலதெய்வமுமான ஸ்ரீரங்கநாதன்" - கத்யத்ரயம்.

651) "அவரெங்கள் குலதெய்வம்" - பெரிய திருமொழி, 2:6:4.

652) "தத்பாதாம்பவதுலம் - அவன் திருவடி விளக்கின நீர் ஒப்பில்லாத தீர்த்தம், அவனுண்டு கழித்த ஶேஷாம் மிக்க தூய்மையுடையது" - பகவச்சாஸ்த்ரம்.

653) "கௌசல்யாஸுப்ரஜா - கௌசல்யையின் சிறந்த புதல்வனுன ஸ்ரீராமனே! மனிதர்களில் உயர்ந்தவனே! விகறைப் பொழுது வருகிறது; துயிலெழுவாய்; தேவர்கள் ஸம்பந்தமான காலேக்கடன்கள் செய்யத்தக்கன" - ஸ்ரீராமா, பால, 23:2.

654) "அரவணேயாயாயரேறே" - பெரியாழ்வார் திருமொழி, 2:2:1.

655) "அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" - திருப்பள்ளியெழுச்சி.

656) "துளபத் தொண்டாய" - திருமாலே, 45.

657) "வலந்தாங்கு சக்கரத்தண்ணல்" - திருவாய்மொழி, 3:7:9.

658) "எந்தொழுகுலம்" - திருவாய்மொழி, 3:7:8.

659) "த்வம்வை கீதப்ரபாவேந - நீ உனது பண்ணின் மஹிமையால் இப்பாவத்தினின்றும் (என்னே) கரையேற்றுவதற்குத் தகுந்தவன், என்று இப்படிச் சொல்லி, இராக்ஷஸன் சண்டெல வம்சத்திற் பிறந்த நம்பாடுவானேச் சரணமடைந்தான்" - கைசிகமாஹாத்ம்யம்.

660) "யந்மயா பஶ்சிமம் - உயர்ந்தஸ்வரமான யாதொரு கைசிகம் என்னும் பண் என்னுல் ஈற்றில் கானம் பண்ணப்பட்டதோ, அந்தப் பண்ணின் பலத்தால் இந்தப் பாபத்திலிருந்து விடுவிக்கிறேன்; உனக்கு நன்மையுண்டாகட்டும்." - கைசிகமாஹாத்ம்யம்.

661) "நிலேயார் பாடல்" - பெரிய திருமொழி, 9:6:10.

662) "ஏவம் தத்ர வரம் -ப்ரஹ்மராக்ஷஸன் அங்கு இவ்விதம் வரத்தைப் பெற்று, பெரிய கீர்த்தியை யுடைய ஸோமசர்மாவானவன் வேள்வி சாபத்தினின்றும் விடுபட்டான்." - கைசிக மாஹாத்ம்யம்.

663) "ஏழையேதலன் கீழ்மகன்" - பெரிய திருமொழி, 5:8:1.

664) "வானேர் தலேமகன்" -

665) "உகந்து தோழன் நீ" - பெரிய திருமொழி, 5:8:1.

666) "உம்பியெம்பி" - பெரிய திருமொழி, 5:8:1.

667) "கூரணிந்த வேல்வலவன்" - பெரியாழ்வார் திருமொழி, 3:10:4.

668) "ததஸ்த்வஹஞ்சாத்தம - அதற்குப் பின்னர் நான் உயர்ந்த வில்லேயும் அம்பையுமுடையவனுய் எங்கு அந்த லக்ஷமணன் இருந்தானே அங்கு இருந்தேன்." - ஸ்ரீராமா, அயோத், 87:23.

669) "ஆச்சகேத ஸத்பாவம் - பிறகு காட்டினேயே இருப்பிடமாகக் கொண்ட குகப்பெருமாள் அறியமுடியாத நிலேமையிலுள்ள பரதனுக்கு இலக்குமணனுடைய நல்ல தன்மையைச் சிறிது சொன்னுர்." - ஸ்ரீராமா, அயோத், 86:1.

670) "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த - இளமைப் பருவம் தொடங்கி ஸ்ரீராமபிரானிடத்தில் லக்ஷமணனன் மிக்க பக்தியுள்ளவனுக ரியுந்தான்." - ஸ்ரீராமா, பால, 18:27.

671) "பரவாநஸ்மி - ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்தவரே! உமக்கு நான் பரதந்த்ரனுக இருக்கிறேன்" - சரிராமா, ஆரண், 15:7.

672) "முன்னேர் தூது" - பெரிய திருமொழி, 2:2:3.

673) "ஸபர்யா பூஜிதஸ் - சக்ரவர்த்தித் திருமகனுன ஸ்ரீராமபிரான் ஸபரியினுல் நன்ருகப் பூஜிக்கப்பட்டார்" - ஸ்ரீராமா, பால, 1:57.

674) "குடைமன்னரிடை நடந்ததூதா" - பெரிய திருமொழி, 6:2:9.

675) "விதுராந்நாநி - தூய்மையுடையனவும் குணமுடையனவுமான விதுரருடைய அன்னங்களேயுண்டார்" - பாரதம், உத்யோகபர்வம்.

676) "தூதுவந்த குரங்கு" - பெரிய திருமொழி, 10:2:6.

677) "த்ருஷ்டா ஸீதா - ஸ்ரீராமா, பால, 1:78.

678) "உபகாராய ஸுக்ரீவோ - ஸ்ரீராமபிரான் செய்த உபகாரத்துக்காகச் சுக்ரீவன் கைங்கர்யம் செய்தவன்; விபீஷணன் இராஜ்யத்தை விரும்பினவன்; ஒன்றையும் விரும்பாமல் திருவடி பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்தான்; ஆதலால், உடனுண்பது அதற்குத் தகுந்தது" - பாத்மோத்தர புராணம்.

679) "கோதில்வாய்மையினுயொடுமுடனேயுண்பன் நான்" - பெரிய திருமொழி,5:8:2.

680) "ஸௌமித்ரே ஹர காஷ்டாநி - லக்ஷமணு! விறகுகளேக் கொண்டு வா, நெருப்பினேக் கடைகிறேன், என் பொருட்டு மரணமடைந்த ஜடாயுவைச் சுட விரும்புகிறேன்" - ஸ்ரீராமா, ஆரண், 68:27.

681) "ஏவமுக்த்வா - இவ்விதம் சொல்லிப் பறவைகட்கு அரசனுன ஜடாயுவை எரிகின்ற சிதையில் ஏற்றித் தர்மாத்மாவான ஸ்ரீராமபிரான் துக்கம் அடைந்தவராய்த் தம் உறவினர்களே எரித்தார்ப்போன்று முறையாக எரித்தார்." - ஸ்ரீராமா, ஆரண்ய, 68:31.

682) "சிந்து பூமகிழும் திருவேங்கடம்" - திருவாய்மொழி, 3:3:2.

683) "துளங்குநீண்முடியரசர்த்தம்குரிசில்" - பெரிய திருமொழி, 5:8:9.

684) "வேகவத்யுத்தரே - வேகவதியின் வடகரையில் புண்யகோடி விமானத்தில் விஷ்ணுவானவர் எல்லா உயிர்களுக்கும் வரம் கொடுக்கும் பெருமாளுய் இன்றும் எல்லாராலும் காணப்படுகிருர்." - ஸ்ரீகாஞ்சீ மாஹாத்மயம்.

685) "தெண்ணீர்ப் பொன்னிதிரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும்" - பெருமாள் திருமொழி, 1:1.

686) "யஜ-தேவபூஜாயாம் - யாகம் என்னும் சொல்லுக்குப் பொருள் திருவாராதனம்"

ஸூத்ரம்-86

687) "சதுர்வேததரோ விப்ரோ - எந்தப்ப்ராஹ்மணன் நான்கு வேதங்களேயும் அறிந்தவனுயினும் எங்கும் பரந்திருக்கிற வாசுதேவனே அறியாமல் இருக்கின்ருனே அவன், வாதங்களாகிற பாரத்தைச் சுமந்து கொண்டிருக்கிற ப்ராஹ்மணக்கழுதை"

688) "ஸர்வே வேதா - யாதொரு பரம்பொருளே எல்லா வேதங்களும் சொல்லுகின்றனவோ" - கடவல்லி.

689) "வேதைஶ்ச ஸர்வை: அஹமேவவேத்ய: - எல்லா வேதங்களலும் அறியத்தக்கவன் நானே" - ஸ்ரீகீதை, 15:15.

690) "ச்வசோபி மஹீபால - ஓ அரசனே! விஷ்ணுவிடம் பக்தியுள்ளவன் நாய் இறைச்சி தின்பவனுயினும்ப்ராஹ்மணனைக் காட்டிலும் மேலானவன்; விஷ்ணுபக்தியில்லாத ஸந்யாஸியோ நாய் இறைச்சி தின்பவனைக் காட்டிலும் தாழ்ந்தவன்."

691) "தத் கர்ம யந்ந - யாதொரு செயலானது ஸம்ஸார பந்தத்தின் பொருட்டு இல்லேயோ அதுதான் நல்ல செயல்; எந்தக் கல்வியானது மோக்ஷத்திற்குப் பயன்படுகிறதோ அதுதான் சிறன்ந்த கல்வியாம்; பொருளின்பங்களின் பொருட்டுச் செய்யப்படும் வாணிகமானது சிரமத்திற்குக் காரணமாகிறது; மற்றைய கல்வியானது செருப்புக் குத்துக் கற்ற கல்விக்குச் சமமாகும்." - ஸ்ரீவிஷ்ணுபுராணம், 1.19:41.

692) "ஆம்நாயாப்யஸநாந்யரண்ய ருதிதம் - ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடித் தாமரைகளில் பக்தியில்லாமல் செய்யப்படும் வேதாத்யயனமானது காட்டிலிருந்து அழுவதுபோல பயனற்றது; வேதத்தில் சொல்லப்பட்ட விரதங்களே நாள்தோறும் அநுஷ்டிப்பதும் சரீரம் இளேத்தலேயே பயனுகவுடையது; குளம் வெட்டுதல் முதலான தர்மங்களும் சாம்பலில் பண்ணப்பட்ட ஆஹுதிபோல் பயனற்றவையேயாம். கங்கை முதலிய நதிகளில் நீராடுவதும் யானே முழுகுவதுபோல் பயனற்றதேயாம். இப்படிப்பட்டவனுக அந்த தேவன் ஸ்ரீமந்நாராயணன் விளங்குகிருன்." - முகுந்தமாலே, 25.

693) "யஸ்யாகிலாமீவஹபிஸ் - எல்லாருடைய பாவங்களேப் போக்குவனவும் மங்களங்களேக் கொடுப்பனவௌமானக்ருஷ்ணனுடைய குணங்களோடும் செயல்களோடும் அவதாரங்களோடும் சேர்ந்திருக்கின்ற வாக்குகள் உலகத்தினே வாழச் செய்கின்றன, விளங்கச் செய்கின்றன, பரிசுத்தத்தைச் செய்கின்றன; அவை நீங்கின வாக்குகள் எவையோ அவை பிணத்துக்குச் செய்ப்பட்ட அலங்காரங்களென்று பெரியோர்களால் சொல்லப்பட்டன" - ஸ்ரீமத்பாகவதம், 10.18:12.

694) "விஷ்ணு பக்திவிஹீநஸ்ய - விஷ்ணுபக்தியில்லாதவனுடைய வேதாத்யயனம், ஜபம், தபம் என்னுமிவைகள் உயிரில்லாத சரீரத்துக்கு, உலகத்தாருகப்பதற்குச் செய்கின்ற வலங்காரம் போன்றவை"

695) "ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ - ஸர்வேஶ்வரன், அவதாரங்களால் தேவர், மனிதர் இவர்களினத்தவனுகிறுன்; பாகவதர்களும் சாதியினுலும், ஒழுக்கத்தாலும், குணங்களாலும் அப்படியே ஆகின்றுர்கள்; இதிலொரு குற்றமில்லே; அவை மிகவுயர்ந்தவையாம்; அடியாரல்லாதவரிடத்து உளவாய கல்வியாலும், ஒழுக்கத்தாலும் ஆய மேன்மையானது விதவைக்குச் செய்த அலங்காரம் போல் பழிப்புக்கு இடமாகிறது."

## இரண்டாம்ப்ரகரணம்

ஸூத்ரம்-87

696) "அணைவது அரவணைமேல்" - திருவாய்மொழி, 2:8:1.
697) "ஊரும்புள்" - திருவாய்மொழி, 10:2:3.
698) "தோளிணைமேலும்" - திருவாய்மொழி, 1:9:7.
699) "பெருமக்களுள்ளவர்" - திருவாய்மொழி, 3:7:5.
700) "அஸந்நேவ - பரம்பொருளையுளனென் றறிகிருனில்லையாகி லவனில்லாதவனுகிருன்." - தைத்திரியம்.
701) "பரம்பொருளுளனென் றறிகிருனுகி லிவனையுள்ளவனுகப் பெரியோர்கள் அறிகிருர்கள்." - தைத்திரியம்.
702) "பத்யு: - பிரமனுடைய செல்வத்தையும் சிவனுடைய செல்வத்தையும் நான் ஆசைப்படவில்லை; யமுனையாற்றங்கரையில் கடம்பமரமாகவாவது குருந்தமரமாகவாவது இருக்கப் பெறுவேனுக"
703) "பூத்த நீள் கடம்பேறி" - நாய்ச்சியார் திருமொழி, 4:4.
704) "பூங்குருந்தேறி யிருத்தி" - நாய்ச்சியார் திருமொழி, 3:3.
705) "ஆஸாமஹோ - யாவர் பெண்கள் சிலர் விடமுடியாத தங்கள் உறவினர்களையும் பெரியோர்கள் சென்ற வழியையும் விட்டு, வேதங்களால் தேடப்படுகின்ற க்ருஷ்ணன் சென்ற வழியைப் பின்தொடர்ந்தார்களோ அந்தப் பெண்களுடைய பாதத்துகள் சேர்ந்த பிருந்தாவனத்தில் உள்ள சிறுசெடிகள், கொடிகள், ஓஷதிகள் என்னுமிவற்றில் யாதேனுமொன்ருக நான் ஆகக்கடவேன்." - ஸ்ரீபாகவதம், 10:48:61.
706) "கோனேரி வாழும்" - பெருமாள் திருமொழி, 4:1.
707) "மீனுய்ப் பிறக்கும்" - பெருமாள் திருமொழி, 4:2.
708) "செண்பகமாய் நிற்கும்" - பெருமாள் திருமொழி, 4:4.
709) "தம்பகமாய் நிற்கும்" - பெருமாள் திருமொழி, 4:5.
710) "எம்பெருமான் பொன்மலை" - பெருமாள் திருமொழி, 4:10.
711) "தவ தாஸ்ய - தேவரீருடைய கைங்கர்யத்திலுல் உளதாகும் இன்பம் ஒன்றிலேயே ஆசையுடையவர்களுடைய திருமாளிகைகளில் எனக்குப் புழுவாகிய பிறவியும் இருக்கட்டும்; மற்றையோர் வீடுகளில் பிரமனுகவும் பிறவியுண்டாக வேண்டா." - ஸ்தோத்ர ரத்னம், 55.
712) "பேராளன் பேரோதும்" - பெரிய திருமொழி, 7:4:4.
713) "வாசிகை: பக்ஷி - சொற்களால் ஏற்பட்ட வினைக்குற்றங்களால் பறவைகளின் தன்மையும், விலங்குகளின் தன்மையும், மனத்தால் ஏற்பட்ட வினைக்குற்றங்களால் சண்டாளத் தன்மையும், சரீரத்தால் உண்டான வினைக் குற்றங்களால் ஸ்தாவரங்களின் தன்மையும் ஜீவன் அடைகிருன்." - மநுஸ்ம்ருதி, 12:9.

## ஸூத்ரம்-88

714) "ந தேஹம் நப்ராணந் - தேவரீருடைய அடிமையின் பெருமைக்குப் புறம்பாகவுள்ள சரீரத்தையும் கண நேரமும் விரும்பேன், பிராணனையும் விரும்பேன், எல்லோரும் விரும்புகிற சுகத்தையும் விரும்பேன், ஆத்மாவையும் விரும்பேன், பின் வேறொன்றையும் விரும்பேன், நாத! அவை நூறு தூள்களாக அழியக்கடவன; மதுசூதனனே! இந்த விண்ணப்பம் மனத்தோடு படாததன்று; இது சத்தியம்." - ஸ்தோத்ரரத்நம், 56.

715) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா - ஆத்மாஜ்ஞான வடிவமானது, ஆனந்த வடிவமானது."

## ஸூத்ரம்-89

716) "மந்திரங்கொள் மறைமுனிவன்" - பெருமாள் திருமொழி, 10:2.

## ஸூத்ரம்-90

717) "எம்மாவுருவும் வேண்டுமாற்றாலாவாய்" - திருவாய்மொழி, 5:8:2.

718) "யதாஹி சோரஸ் ஸ ததாஹி புத்த: - கள்ளனைப்போல், வேதத்திற்குப் புறத்தனான புத்தனும் தள்ளத்தக்கவன்" - ஸ்ரீராமா, அயோத், 109:33.

719) "கள்ளவேடத்தைக் கொண்டு" - திருவாய்மொழி, 5:10:4.

720) "நஸ்மர்த்தவ்யோ - வேதமந்திரமாயினும் விஷ்ணு ஸம்பந்தமில்லாத மந்த்ரம் விஷேஷமாக நினைக்கத் தக்கதன்று."

721) "மானிடம் பாட லென்னாவது" - திருவாய்மொழி, 3:9:3.

722) "நசூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதாஸ்ஸ்ருதா: - பகவானுடைய பக்தர்களானவர்கள் ஸூத்ரர்களல்லர்; ப்ராஹ்மணர்களோடொத்தவர்கள் என்றும் பாகவதர்களேன்றும் சொல்லப்பட்டார்கள்; எல்லாச் சாதிகளிலும் எவர்கள் பகவானிடத்தில் பக்தியில்லாதவர்களோ அவர்களே ஸூத்ரர்கள்" - பாரதம், ஆச்வ, 118:32.

723) "காடுவாழ் சாதியுமாகப் பெற்றான்" - நாய்ச்சியார் திருமொழி, 12:8.

724) "காலிப்பின்னே வருகின்ற" - பெரியாழ்வார் திருமொழி, 3:3:1.

725) "தென்னுரையில் கேட்டறிவதுண்டு" - பெரிய திருமடல், 6.

726) "ஹரிகீர்த்திம் விநைவாந்யத் - ஓ அரசனே! விஷ்ணுவினுடைய புகழைப் பற்றிய பாக்களைத் தவிர வேறான பாக்களைப்ப்ராஹ்மணன் பாடலாகாது" - மாத்ஸ்ய புராணம்.

727) "ச்வபசோபி மஹீபால - ஓ அரசனே! நாயிறைச்சி தின்னும் கீழ்ப்பிறப்பினனும் விஷ்ணுவிடம் பக்தியுள்ளவன்ப்ராஹ்மணனைக் காட்டிலும் மேலானவன்"

728) "பெறற்கரிய நின்னபாத பத்தியான" - திருச்சந்த விருத்தம், 100.

729) "ஆராரமரர்" - திருவாய்மொழி, 10:5:8.

730) "இலங்குவான் யாவருமேறுவர்" - திருவாய்மொழி, 3:8:11.

731) "அமரவோரங்கமாறும்" - திருமாலே, 43.

732) "அநாசாராந் துராசாராந் - ஆசாரத்தை விட்டவர்களும், கெட்ட ஆசாரத்தை யுடையவர்களும் ஞானமில்லாதவர்களும், தாந்த சாதியில் பிறந்தவர்களுமான என் பக்தர்களைப்ராஹ்மணோத்தமன் இகழ்வானாகில் உடனே அவன் சண்டாளத் தன்மையை அடைவான்." -ப்ரஹ்மாண்ட புராணம்.

ஸூத்ரம்-91

733) "தக்ஷிணா திக்க்ருதா - நற்காரியங்களையே செய்கின்ற எந்த அகத்தியரால் தென் திசையானது புகலிடமாகச் செய்யப்பட்டதோ" - குருகாமாஹாத்ம்யம்.

734) "வண் தமிழ் மாமுனி" -

735) "க்ருதாதிஷு நரா ராஜந் - ஓ அரசனே! கிருதயுகம் முதலான யுகங்களிலுள்ள மக்கள் கலியுகத்தில் பிறக்கும் பிறப்பினை விரும்புகிறார்கள்; அரசனே! கலியுகத்திலே நாராயணனே அடையத்தக்க பரம்பொருள் என்றெண்ணுகின்ற பெரியோர்கள் அங்குமிங்கும் பிறப்பார்கள்; தமிழ்த்தேசத்திலோ அதிகமாகப் பிறப்பார்கள்; எவ்விடத்தில் தாமிரபரணி, கிருதமாலா, பாலாறு, மிகுந்த பெருமையுடைய காவேரி, மேலைக் கடலில் சென்று விழுகின்ற பேரியாறு என்னுமிவ்வாறுகள் ஓடுகின்றனவோ அங்குப் பிறப்பார்கள்; அரசனே! எந்த மனிதர்கள் அந்த நதிகளின் தண்ணீரைக் குடிக்கின்றார்களோ அவர்களுக்கு நாராயணனிடத்தில், துன்பம் என்பது சிறிதுமில்லாமல் மிகுந்த பக்தி யுண்டாகின்றது." - ஸ்ரீபாகவதம், 11.5:38-39.

736) "கலியும் கெடும்" - திருவாய்மொழி, 5:2:1.

737) "க்ரூரே கலியுகே - நாஸ்திகர்களால் கலங்கும்படி செய்யப்பட்ட கொடிய கலியுகம் வந்தபோது, விஷ்ணுவினுடைய அம்ஶத்துக்கு அம்ஶமாகப் பிறந்தவரும் வேதம் வேதாந்தங்கள் இவற்றின் உண்மையை அறிந்தவரும் தத்வஜ்ஞானிகளுள் சிறந்தவருமான நம்மாழ்வார் தமிழ் மொழியாலே வேதத்தினுருவமான துதிகளைச் செய்வதற்கு, உலகத்திற்கு நலத்தைச் செய்யும் எண்ணத்தோடு உண்டாகப் போகிறார்" - குருகாமாஹாத்ம்யம்.

ஸூத்ரம்-92

738) "க்ருஷி கோரக்ஷவாணிஜ்யம் வைஶ்யம் - பயிர்ச்செய்தல், பசுக்களைக் காத்தல், வாணிகம் செய்தல் என்னுமிவை வைஶ்யனுக்கு இயல்வான தொழில்கள்." - ஸ்ரீகீதை, 18:44.

739) "கலௌபுந: பாபரதாபிபூதே - உலகத்தாரைக் காட்டிலும் மேம்பட்டவரும் உலகமே வுருவானவருமான அந்த விஷ்ணுவானவர், பாபத்தில் பற்றுடையவர்களால் சூழப்பட்ட இக்கலியுகத்தில் எல்லா மக்களையும் நன்கு

பாதுகாப்பதற்காக, அடியார்களிடத்தில் அன்புள்ளவனுதலால் ஒருபக்தனுக அவதரித்தார்."

740) "க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம் -க்ருஷ்ணத்வைபாயநர் என்னும் பெயரையுடையவ்யாஸரை இறைவனுன நாராயணனுக நீ அறிக" - ஸ்ரீவிஷ்ணு புராணம், 3:4:5.

741) "ஸோயம் நாராயணஸ் ஸாக்ஷாத் - அந்தத் தன்மையுடைய இந்தவ்யாஸ முனிவர் அந்த நாராயணனே" - பாரதம்.

742) "விண்ணுட்டவர் மூதுவர்" - திருவிருத்தம், 2.

743) "கரை கண்டோர்" - திருவாய்மொழி, 8:3:10.

744) "முக்தாநாம் லக்ஷணம்ஹ்யேதத் -ச்வேதத் தீவினில் வசிப்பவர்களாய், முக்தர்களைப் போன்றவர்களுக்கும் இது இலக்கணமாம்" - பாரதம், சாந்தி பர்வம்.

745) "பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளும்" - திருவிருத்தம், 79.

746) "பின்னைகொல் நிலமாமகள்கொல்" - திருவாய்மொழி, 6:5:10.

747) "முன்னம் நோற்றவிதிகொலோ" - திருவாய்மொழி, 6:5:7.

748) "அநந்தன் மேல்கிடந்த வெம்புண்ணியா" - திருச்சந்த விருத்தம், 45.

## ஸூத்ரம்-93

749) "புவியுமிருவிசும்பும்" - பெரிய திருவந்தாதி, 75.

750) "யாவர் நிகரகல் வானத்தே" - திருவாய்மொழி, 4:5:8.

751) "மாறுளதோ விம்மண்ணின் மிசையே" - திருவாய்மொழி, 6:4:9.

752) "வைகுந்தமோ வையமோ நும்நிலையிடம்" - திருவிருத்தம், 75.

753) "தெய்வத்தினமோரனையீர்களாய்" - திருவிருத்தம், 23.

754) "வானேரினத்தலைவன்" - பெரிய திருவந்தாதி, 25.

755) "அந்தாமத்தன்பு செய்து" - திருவாய்மொழி, 2:5:1.

756) "திருவருள்களும் சேர்ந்தமைக் கடையாளம்" - திருவாய்மொழி, 8:9:6.

757) "உகந்துகந்துள் மகிழ்ந்து குழையும்" - திருவாய்மொழி, 6:5:4.

758) "திமிர்க்கொண்டா லொத்து நிற்கும்" - திருவாய்மொழி, 6:5:2.

759) "ஸ்தப்தோஸ்யுத - திமிர்க்கொண்டவனைப் போன்றிருக்கின்றுய், அந்தப் பரம்பொருளைக் கேட்டறிந்தனையோ" - சாந்தோக்யம்.

760) "நாட்டாரோடியல்வொழிந்து" - திருவாய்மொழி, 10:6:2.

761) "உண்டியே உடையே யுகந்தோடி" - பெருமாள் திருமொழி, 3:4.

762) "யானே யென்றனதே" - திருவாய்மொழி, 2:9:9.

763) "வேதஶாஸ்த்ராவிரோதிநா - வேதஶாஸ்த்ரத்துக்கு மாறுபாடில்லாத" - மநுதர்மஶாஸ்த்ரம், 12:106.

764) "வித்யாமதோ தநமத - கல்வியால் உண்டாய களிப்பு, செல்வத்தாலாய களிப்பு, மூன்றுவது குடிப்பிறப்பாலாய களிப்பு என்னுமிவை, செருக்குக் கொண்டவர்களுக்கு மதத்தை யுண்டாக்குகின்றன."

765) "ஆவலிப்பு" - திருமாலை, 1. (ஆவலிப்தர் - செருக்குற்றோர்.)

766) "பறவையின் பாகன் மதன செங்கோல் நடாவிய கூற்றம்" - திருவிருத்தம், 5.

767) "நின்கண்வேட்கை யெழுவிப்பன்" - திருவிருத்தம், 96.

768) "கொன்றுயி ருண்ணும்" - திருவாய்மொழி, 5:2:6.

769) "வன்துயரை மருங்கு கண்டிலமால்" - பெரிய திருவந்தாதி, 54.

770) "திரியும் கலியுகம் நீங்கி" - திருவாய்மொழி, 5:2:3.

771) "பவிஷ்யத்யதரோத்தரம் - பொருள்களின் தன்மைகள் தலைகீழாக மாறப்போகின்றன" - பாரதம்.

772) "கலௌஜகத்பதிம் - மைத்ரேயரே! கலியுகத்தில், உலகத்துக்குத் தலைவனும் எங்கும் பரந்துள்ளவனும் எல்லாப் பொருள்களையும் படைப்பவனும் எல்லாரையும் நியமிப்பவனுமான எம்பெருமானை, பாவங்களால் கெடுக்கப்பட்ட மக்கள் வணங்கமாட்டார்கள்" - ஸ்ரீவிஷ்ணுபுராணம், 6:1:50.

773) "பெரிய கிதயுகம் பற்றி" - திருவாய்மொழி, 5:2:3.

774) "பட்டபோதெழு போதறியாள்" - திருவாய்மொழி, 2:4:9.

775) "நந்தந்த்யுத - ஸூர்யன் உதயமானவுடன் பொருளீட்டுவதற்குரிய காலம் வந்ததென்று மகிழ்வார்கள்; ஸூர்யன் மறைந்தவுடனே மனைவியோடு இன்பம் நுகர்த்தற்குரிய காலம் வந்ததென்று மகிழ்வார்கள்" - ஸ்ரீராமா, அயோத்யா, 105:24.

776) "ப்ராதர் மூத்ர - மக்கள் காலையில் மூத்ரம், மலம் இவற்றினாலும், நடுப்பகலில் பசியினாலும் தாகத்தாலும், மாலையில் காமத்தாலும், இரவில் தூக்கத்தாலும் துன்புறுத்தப்படுகிறார்கள்" - ஸ்ரீவிஷ்ணுபுராணம், 1:17:62.

ஸூத்ரம்-94

777) "ஊழிதொறும் தன்னுள்ளே படைத்து" - திருவாய்மொழி, 10:7:9.

778) "சோம்பாதிப்பல்லுருவை" - பெரிய திருவந்தாதி, 18.

779) (ஒன்றியொன்றி யுலகம் படைத்தான் - திருவாய்மொழி, 3:9:10.)

780) (பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் - திருவாய்மொழி, 2:10:11)

781) (அளிமகிழ்ந்து உலகமெல்லாம் படைத்து - திருவாய்மொழி, 3:4:8.)

782) "நிலநீரெரிகால்" - திருவாய்மொழி, 7:6:2.

783) "தத்ஸ்ருஷ்ட்வா, ததேவாநுப்ராவிசத் - அத்தகைய வெல்லாப் பொருட்களையும் படைத்து அவற்றினுள் அநுப்ரவேசித்தான்" - தைத்திரியோபநிஷத்.

784) "அன்னமதாயிருந்தங்கற" - பெரிய திருமொழி, 11:4:8.

785) "குறைவில் தடங்கடல் கோளரவேறித்தன் கோலச் செந்தாமரைக்கண், உறைபவன் போலவோர் யோகுபுணர்ந்த வொளிமணிவண்ணன்" - திருவாய்மொழி, 3:10:2.

786) "துயரில்மலியும் மனிசர்ப்பிறவியில் தோன்றிக் கண்காணவந்து" - திருவாய்மொழி, 3:10:6.

787) "நசக்ஷுஷா பச்யதி கச்சநைநம் - ஒருவனும் இந்தப் பரமபுருஷனை ஊனக்கண்களாலே பார்ப்பதற்கில்லை" - கடோபநிஷத்.

788) "நமாம்ச்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம் - ஊனக்கண்களையுடையவன் அந்தப் பரமபுருஷனைக் காண்கிறானில்லை"

789) "கட்கண்ணால் காணாதவவ்வுரு" - பெரிய திருவந்தாதி, 28.

790) "ஆள்பார்த் துழிதருவாய்" - நான்முகன் திருவந்தாதி, 60.

791) "ஓ ஓ உலகினதியல்வே" - திருவாசிரியம், 6.

792) "பெற்றதாயிருக்க" - பெரிய திருமொழி, 11:6:6.

793) "யாதானும்பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடுசெய்யும்" - திருவிருத்தம், 95.

794) "கழறலம்" - திருவிருத்தம், 58.

795) "அழறலர் தாமரை" - திருவிருத்தம், 58.

796) "பெருங்கண்மலர்" - திருவிருத்தம், 45.

797) "அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும்" - பெருமாள் திருமொழி, 1:10.

798) "யாதானுமோராக்கையில் புக்கு" - திருவிருத்தம், 95.

799) "ஆக்கையின் வழியுழல்வேன்" - திருவாய்மொழி, 3:2:1.

800) "மாறிமாறி பலபிறப்பும் பிறந்து" - திருவாய்மொழி, 2:6:8.

801) "பல்பிறவியில் படிகின்ற யான்" - திருவாய்மொழி, 3:2:2.

802) "பிறவிக்கடலுள் நின்றுநான் துளங்க" - திருவாய்மொழி, 5:1:9.

803) "நம்மேலொருங்கே பிறழவைத்தார்" - திருவிருத்தம், 45.

804) "பக்கநோக்கறியான்" - திருவாய்மொழி, 2:6:2.

805) "நாஸௌ புருஷகாரேண - இந்த பகவானாகிய யான் புருஷகாரத்தாலும் வேறு ஸாதனங்களாலும் ஒருவனைக் கடாக்ஷிக்கிறே னல்லேன், என்னிச்சையாலே ஒருவனை ஒருகால் கடாக்ஷிக்கிறேன்" - பாஞ்சராத்ரம்.

806) "நிர்ஹேதுக கடாகேண - சிறந்த அறிவுடையோனே! என்னுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலுண்டான ஆசார்யனுடைய அங்கீகாரத்தால் உயர்ந்த பேற்றினை யடைகிறார்கள்" - பாஞ்சராத்ரம்.

807) "அனந்தன்மேல்" - திருச்சந்த விருத்தம், 45.

ஸூத்ரம்-95

808) "ச்ரமணீம் தர்மநிபுணா மபிகச்ச - விருந்தினரை உபசரிக்கும் ஆற்றலையுடையவளும் ஸந்யாசினியுமான சபரியை அடைவாயாக" - ஸ்ரீராமா, பால, 1:57.

809) "ஸோப்யகச்சந் மஹாதேஜாச் சபரீம் - மிகப்பெரிய வொளியையுடையவரான அந்த இராமபிரான் சபரியிடம் சென்றார்" - ஸ்ரீராம, பால, 1:57.

810) "சக்ஷுஷா தவ ஸௌம்யேந - இரகுவம்சத்தில் அவதரித்தவரே! உன்னுடைய குளிர்ந்த திருக்கண்களால் தூயவளாக வாயினேன்; பகைவர்களைக் கொல்லுகிறவனே! உன்னுடைய அருளால் மீண்டுவருதலில்லாத உலகத்தை யடையப் போகிறேன்" - ஸ்ரீராமா, ஆரண்ய, 74:12.

811) "நிவாஸ யயௌவேச்ம - மஹாத்மாவான விதுரருடைய வீட்டிற்குத் தங்கியிருப்பதற்குச் சென்ருர்" - பாரதம், உத்யோகபர்வம்.

812) "விதுராந்நி புபுஜே -ப்ரயோஜனத்தை எதிர்ப்பாராதனவாய் குணமுடையவனுமான விதுரருடைய அன்னங்களை உண்டார்" - பாரதம் உத்யோகபர்வம்.

813) "பீஷ்மத்ரோணுவதிக்ரம்ய - மதுசூதனனே! தாமரைக்கண்ணனே! பீஷ்மரையும், துரோணரையும், என்னையும் கடந்து சென்று ஸுத்ரரான விதுரருடைய அன்னத்தை யெதற்காக வுட்கொண்டாய்" - பாரதம், உத்யோகபர்வம்.

814) 814. "புண்டரீகாக்ஷ - தாமரைக்கண்ணனே!" - பாரதம், உத்யோகபர்வம்.

815) "வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது" - நாய்ச்சியார் திருமொழி, 12:6.

816) "தத்ரைகா வித்ருதா - அங்கொருத்தி கணவனுல் தடுக்கப்பட்டவளாய்த் தன் கேட்டிருந்தபடியே கண்ணபிரானை மனத்தால் கட்டிக்கொண்டு கர்மத்தாலுண்டான சரீரத்தை விட்டள்" - ஸ்ரீபாகவதம், 10.23:34.

817) "அங்கணிரண்டுங் கொண்டெங்கல்மெள் நோக்குதியேல்" - திருப்பாவை, 22.

818) "அமலங்களாக" - திருவாய்மொழி, 1:9:9.

ஸூத்ரம்-96

819) "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" - திருவாய்மொழி, 10:3:10.

820) "ப்ருந்தாவனம் பகவதா -ஜ்ஞானம் முதலான ஆரு குணங்களை யுடையவனும் வருத்தமில்லாமல் காரியத்தைச் செய்பவனும் பசுக்களின் நலத்தை விருபுகின்றவனுமான கண்ணபிரானுல் நல்ல மனத்தால் நெருஞ்சிற்காடு புல்தரையாகுமாறு நினைக்கப்பட்டது" - ஸ்ரீவிஷ்ணு புராணம், 5:6:28.

821) "உத்பந்ந நவசஷ்பாட்யா - மனத்தினைக் கவரக்கூடியதும் புதியதுமான புற்களால் நிறைந்ததாக வாயிற்று." - ஸ்ரீவிஷ்ணு புராணம், 5:6:37.

822) "நமோப்ரஹ்மண்ய -ப்ராஹ்மணர்களுக்குத் தேவனும் பசுக்களும்,ப்ராஹ்மணர்களுக்கு நலத்தைச் செய்பவனுமான பகவானுக்கு வணக்கம்; உலகத்துக்கு நலத்தைச் செய்பவனும் கோவிந்தனுமானக்ருஷ்ணனுக்கு வணக்கம் வணக்கம்" - பாரதம்.

823) "எனைத்தோர் பிறப்பும்-எதிசூழல் புக்கு" - திருவாய்மொழி, 5:7:6.

824) "நல்லவருள்கள் நமக்கே தந்தருள் செய்வான்" - திருவாய்மொழி, 8:6:1.

825) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் - "எல்லா உயிர்களுடைய நலத்தை எண்ணுகிற வென்னை" - ஸ்ரீகீதை, 5:29.

826) "என்னைத் தன்னுக்கி" - திருவாய்மொழி, 7:9:1.

827) "ஊரும் நாடுமுலகமும்" - திருவாய்மொழி, 6:7:2.

ஸூத்ரம்-97

828) "மயர்வற மதிநலம்" - திருவாய்மொழி, 1:1:1.

ஸூத்ரம்-98

829) "இருள் தருமா ஞாலம்" - திருவாய்மொழி, 10:6:1.
830) "இருள் தீர்ந்திவ்வையம் மகிழ" - பெரிய திருமொழி, 11:4:8.
831) "துயக்கன் மயக்கன்" - திருவாய்மொழி, 1:9:6.
832) "ஸ்தாணுர்வா புருஷோவா - குற்றிகொல்? மகன்கொல்?" (தூணு? அல்லது மனிதனு?)
833) "மனனகமலமற மலர்மிசை யெழுதரும்" - திருவாய்மொழி, 1:1:2.
834) "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு" - முதல் திருவந்தாதி, 67.
835) "உளப்பெருங் காதல்" - திருவிருத்தம், 59.
836) "நேரிய காதல்" - திருவாசிரியம், 2.
837) "காணக்கழி காதல்" - இரண்டாந் திருவந்தாதி, 56.
838) "கழியமிக்கதோர் காதல்" - திருவாய்மொழி, 5:5:10.
839) "காதல் கடல்புரைய" - திருவாய்மொழி, 5:3:4.
840) "காதல் கடலின் மிகப்பெரிதால்" - திருவாய்மொழி, 7:3:6.
841) "காதலுரைக்கில் - நீள்விசும்பும் கழியப் பெரிதால்" - திருவாய்மொழி, 7:3:8.
842) "மெய்யமர் காதல்" - திருவாய்மொழி, 6:8:2.
843) "அன்புசூட்டிய" - திருவிருத்தம், 2.
844) "அன்பிலின்பு" - திருவாசிரியம், 2.
845) "அன்பே பெருகும்மிக" - பெரிய திருவந்தாதி, 8.
846) "ஆராவன்பு" - திருவாய்மொழி, 6:10:2.
847) "வேவாராவேட்கை நோய்" - திருவாய்மொழி, 2:1:10.
848) "பெருகுமால் வேட்கையும்" - திருவாய்மொழி, 9:6:1.
849) "ஆவியின் பரமல்லவேட்கை" - திருவாய்மொழி, 10:3:2.
850) "அவா வொருக்கா வினையொடும்" - திருவிருத்தம், 64.
851) "காண்பானவாவுவன்" - திருவிருத்தம், 84.
852) "சூடுதற்கவா" - திருவாசிரியம், 5.
853) "அதனில் பெரிய வென்னவா" - திருவாய்மொழி, 10:10:10.
854) "ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: - ஸங்கத்தினின்றும் காமம் உண்டாகிறது" - ஸ்ரீகீதை, 2:62.

ஸூத்ரம்-99

855) "ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு - ஆயிரக்கணக்கான பிறவிகளிலே செய்த கர்மஜ்ஞான பக்டிக்களால் அழிந்த பாவங்களையுடைய மக்களுக்குக் கண்ணபிரானிடத்தில் பக்தி யுண்டாகின்றது." -ஸ்ம்ருதி.
856) "ஒன்றி நின்று நற்றவம்" - திருச்சந்த விருத்தம், 75.

857) "சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே - யோகத்தின் ஆரம்ப காலத்தில் யோகத்தினின்றும் நழுவினவன் பரிசுத்தர்களும் ஸ்ரீமாந்களுமானவர்களுடைய குலத்திலே பிறக்கிறான்; அன்றிக்கே, யோகம் செய்கின்றவர்களும் சிறந்தஜ்ஞானியுமானவர்களுடைய பெரிய குலத்திலே பிறக்கிறான்." - ஸ்ரீகீதை, 6:41.

858) "ஜநித்வாஹம் வம்சே மஹதி - நான், உலகில்ப்ரசித்தமான கீர்த்தியையுடையவர்களும், பரிசுத்தர்களும், யோகம் செய்து கொண்டிருப்பவர்களும், குணமயமானப்ரக்ருதி, உயிர் இவற்றின் உண்மை நிலையை அறிந்தவர்களும் ஆனவர்களுடைய குலத்தில் பிறந்து" -ஸ்தோத்ர ரத்நம், 61.

859) "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும்" - நான்முகன் திருவந்தாதி, 63.

860) "குளித்து மூன்றனலை யோம்பும்" - திருமாலை, 25.

861) "ஓதியுருவெண்ணுமந்தி" - முதல் திருவந்தாதி, 33.

862) "ஐவேள்வி" - பெரிய திருமொழி, 3:8:4.

863) "அறுதொழில்" - திருவெழுகூற்றிருக்கை.

864) "ஊன்வாட வுண்ணதுயிர் காவலிட்டு" - பெரிய திருமொழி, 3:2:1.

865) "பொருப்பிடையே நின்றும்" - மூன்ருந் திருவந்தாதி, 76.

866) "வீழ்கனியு மூழிலையு மென்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தி" - பெரிய திருமடல், 12.

867) "மேவு துன்பவினைகளை விடுத்து" - திருவாய்மொழி, 3:2:8.

868) "தர்மேண பாபமபநுததி - நாடுறும் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்கையாலே பாவங்களைப் போக்குகிறான்" - தைத்திரியோபநிஷத்.

869) "சமதமநியதாத்மா ஸர்வபூதாநுகம்பீ - மனத்தினை யடக்குவது, புறவிந்திரியங்களை யடக்குவது என்னுமிவற்றில் நியமத்துடன் கூடிய மனத்தையுடையவன் எல்லா வுயிர்களிடத்திலும் அருள் பொருந்தியவன்"

870) "ஜாத்யாச்ரய நிமித்தாதுஷ்டாதந்நாத் காயசுத்திர் விவேக: - ஜாதி, ஆச்ரயம், நிமித்தம் என்னு மிம்மூவகையான குற்றங்களில்லாத அன்னத்தால் உண்டாகும் காயசுத்தி விவேகம்" - போதாயநவ்ருத்தி.

871) "ஆஹாரசுத்தௌ ஸத்வசுத்தி: - ஸத்வகுணத்திற்குரிய உணவினை யுண்பவர்களுக்கு ஸத்வம் தூய்மை யடைகிறது" - சாந்தோக்ய உபநிஷத்.

872) "அபயம் ஸத்வஸம்சுத்தி: - ஸத்வத்திற்குத் தூய்மை பயமற்றிருத்தல்" - ஸ்ரீகீதை, 16:1.

873) "ஸத்வாநுரூபா ஸர்வஸ்யச்ரத்தா பவதி - எல்லோருக்கும்ஶ்ரத்தையானது ஸத்வத்திற்குத் தகுதியாக வுண்டாகிறது" - ஸ்ரீகீதை, 17:3.

874) "விமோக: காமாநபிஷ்வங்க:" - போதாயநவ்ருத்தி.

875) "காமாத்க்ரோதோபிஜாயதே - காமத்தாலேக்ரோதம் உண்டாகிறது" - ஸ்ரீகீதை, 2:62.

876) "ஆரம்பணஸம்சீலநம் புந:புநரப்யாஸ:" - போதாயநவ்ருத்தி.

877) "பஞ்சமஹாயஜ்ஞாத்யநுஷ்டாநம் சக்தித:க்ரியா - ஐவேள்வி முதலானவற்றைத் தன் சக்திக்குத் தகுந்தவாறு செய்தல்க்ரியை" - போதாயநவ்ருத்தி.

878) "ஸத்யார்ஜவ தயா - ஸத்யம், ஆர்ஜவம், தயை, தானம், அஹிம்சை, அநபித்யை என்னுமிவை கல்யாணம் எனப்படும்" - போதாயநவ்ருத்தி.

879) "தேசகால வைகுண்யாத்" - போதாயநவ்ருத்தி.

880) "தத்விபர்ய யஜா துஷ்டிருத்தர்ஷ: - போதாயநவ்ருத்தி. தெச காலங்களினுடைய அநுகூலத்தாலும், பிரியமான பொருட்களில் வைத்த இடையறுத நினைவினுலும் உண்டான மகிழ்ச்சி; இவை உத்தர்ஷம். அநுத்தர்ஷமாவது உத்தர்ஷமில்லாமை."

881) "சமச் சித்தப்ரசாந்திஸ் - சமமாவது மனத்தினை அடக்குதல்; தமமாவது இந்திரியங்களை யடக்குதல்"

882) "க்ஷமா ஸத்யம் தமச் சம:"

883) "தமோ பாஹ்யகரணுநாமநர்த்த - தமமாவது புறக்கரணங்களை ஐம்புல வின்பங்களில் செல்லாதபடி யடக்குதல்; சமமாவது அந்தக்கரணத்தை அப்படியே யடக்குதல்"

884) "சாந்தோ தாந்த - மனத்தினை யடக்கினவனும், புறவிந்திரியங்களை யடக்கினவனும், காம்ய கர்மங்களில் ஆசை யில்லாதவனும், பொறுமையுள்ளவனும், சமாதானம் அடைந்த மனத்தினை யுடையவனுமாகி, இந்த இந்த உயிரினிடத்திலேயே பரம்பொருளைப் பார்க்கக் கடவன்." -ப்ருஹதாரண்ய உபநிஷத்.

885) "ஈனமாயவெட்டு நீக்கி - திருச்சந்த விருத்த, 114.

886) "இனமலரெட்டுமிட்டு" - பெரிய திருமொழி, 1:2:7.

887) "கந்தமாமலரெட்டுமிட்டு" - பெரிய திருமொழி, 3:5:6.

888) "அவன் பெயரெட்டெழுத்து மோதுவார்கள்" - திருச்சந்த விருத்தம்,77.

889) "ஆர்வமோடிறைஞ்சி நின்றவன் பெயர்" - திருச்சந்த விருத்தம்,78.

890) "அஹிம்ஸாப்ரதமம் புஷ்பம் - பிற வுயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருப்பது முதல் புஷ்பம், இந்த்ரியங்களை யடக்குவது இரண்டாம் புஷ்பம், எல்லா வுயிர்களிடத்தும் அருளுள்ளவனுக விருப்பது மூன்ருவது புஷ்பம், பொறுமை நான்காவது புஷ்பம், இது சிறந்தௌ;ஜ்ஞானம் ஐந்தாவது புஷ்பம், தவம் ஆருவது புஷ்பம், அப்படியேத்யானம் ஏழாவது புஷ்பம், ஸத்யம் எட்டாவது புஷ்பம், இப்படி எட்டு விதமான இந்த மலர்கள் விஷ்ணுவிற்குப்ப்ரீதியைச் செய்கின்றவை யாகின்றன."

891) "எட்டினுய பேதமோடிறைஞ்சி" - திருச்சந்த விருத்தம், 77.

892) "மநோபுத்த்யபிமாநேந ஸஹ - மனம் புத்தி செருக்கு என்னுமிவைகளோடு,இரண்டு கைகளையும், இரண்டு கால்களையும் அங்கேயே தலையையும் ஐந்தாவதாக பூமியில் வைத்து"

893) "பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து" - திருவாய்மொழி, 5:2:9.

894) "சாந்தொடு விளக்க் தூபம் தாமரை" - திருவாய்மொழி, 10:2:10.

895) "தேவகாரியம் செய்து" - பெரியாழ்வார் திருமொழி, 4:4:1.

896) "ஒன்றி நின்று நற்றவம் செய்து" - திருச்சந்த விருத்தம், 75.

897) "கஷாயே கர்மபி: - கர்மங்களைச் செய்வதனுல் பாவம் அழிந்தவளவில் பின்னர்ஜ்ஞானம் தோன்றுகிறது."

